# சதுர்வேதீய விஸ்வகர்ம ஸம்ஹிதா
# நூல் வெளியீடு



**தமிழ்நாடு ஸ்ரீ விஸ்வகர்ம பிராமண குல ஜகத்குரு**
**சீனந்தல் ஆதீனம் பீடாதிபதியும்**
**பரசமயகோளரிநாத மடாதிபதியுமான**
**பிரம்மஸ்ரீ சிவஞான ஷண்முகாச்சார்ய ஸ்வாமிகள்**
**முன்னிலையில் இந்நூலினை என்குடும்பத்தவர்களுடன்**
**வெளியிட்ட நாள் 14.9.2013**



என்னுடைய தந்தை பிரம்மஸ்ரீ ம.சேகராச்சாரியார், தாய் த.கல்யாணி
வலதுபுறம் என்னுடைய கடைசிதம்பி அருண், மத்தியில் சந்தோஷ்,
இடதுபுறம் சுரேஷ்சர்மாவாகிய நான்.

## ஆசிரியர் முன்னுரை:

ஸமஸ்த புரோஹிதர்களுக்கும் மற்றும் அனைவர்களுக்கும் என்னுடைய அன்பான நமஸ்காரங்கள். நமது நாட்டின் பாரம்பரியத்தினை பார்க்கும் போது பாரததேசத்தின் முதல் நூலான ரிக்வேதத்திலிருந்து நமது கலை கலாச்சாரம் மற்றும் சமூகங்களின் வழிதோன்றல் முதலியவற்றை காணமுடிகிறது. இவற்றிலிருந்து நம் முன்னோர்களின் வழிதோன்றல் அவர்களின் வழிபாட்டு விதிமுறைகள், விஞ்ஞான மதிநுட்பம், மருத்துவம் மற்றும் இசை துறையின் வளர்ச்சிகள், போர்கலை, அரசியல் திறமை, நகர கிராம மற்றும் ஆரண்யக நாகரீக வளர்ச்சிகளை காணமுடிகிறது.

இப்படிப்பட்ட வேதங்களை விஶ்வேஶ்வரன் தனது பஞ்ச முகங்களான ஸத்யோஜாத முகத்திலிருந்து ருக்வேதத்தையும், வாமதேவ முகத்திலிருந்து யஜுர்வேதத்தையும், அகோர முகத்திலிருந்து ஸாமவேதத்தையும், தத்புருஷ முகத்திலிருந்து அதர்வணவேதத்தையும், ஈஶான முகத்திலிருந்து பிரணவவேதத்தையும் படைத்தார் என்று யஜுர்வேதத்தின் பஞ்ச பிரம்ம உபநிஷத் கூறுகிறது. இவ்வேதங்களை முறையே ஸானக, ஸனாதன, அஹபூன, பிரத்ன, ஸுபர்ண பிரம்மருஷிகளுக்கு அளித்தார். இவர்களின் மூலம் வேதங்கள் பல கிளைகளாக வளர்ந்தோங்கியது என்று யஜுர்வேத ஶதபத பிராமணம் சொல்லுகின்றது.

வேதத்தினை கடவுள் பஞ்சப்ரஹ்ம மயமாக வெளிப்படுத்தினார்கள் இவற்றை அறிய ரிஷிகள் பஞ்சேந்திரயங்களை கட்டுபடுத்தி தங்களுடைய தபோ வலிமையின் மூலமாக உணர்ந்தார்கள். அப்படியுணர்ந்ததை "ஸ்ருதி"யாக வெளிப்படுத்தினார்கள். இவையனைத்தும் இப்பிரபஞ்சத்தினை ஆதியல் விஶ்வகர்மா தோற்றிவித்த போதே இச்சுருதிகளை படைத்துவிட்டார் என்று வேதம் சொல்லுகின்றது.

இவற்றை ரிஷிகளுக்கும் தேவர்களுக்கும் உணரவைக்க இப்பரபிம்மனே பரமேஷ்டீயாகவும், பிரஜாபதியாகவும் தோன்றி முதலில் ஸாகனாதி ரிஷிகளுக்கும் அதர்வணர், ஆங்கிரஸர், விஶ்வரூபர், அபூதி, அஶ்விநிகள் முதலியவர்களுக்கு கற்பித்தார் என்று யஜுர்வேத ஶதபத- வம்ஶ பிராமணம் கூறுகின்றது. இதே போன்று இந்திராதி தேவர்கள் மூலமாக உபதேசிக்கப்பட்டு பின்னர் தேவராத, ஸுயஜ்ஞ, கைகோல, கௌஷீதகி மற்றும் ஶாங்காயன ரிஷிகளின் வழியே

வந்தது என்று ருக்வேத ஶாங்காயன வம்ஶ பிராமணமும் கூறுகின்றது. அதர்வணவேத கோபத பிராமணமோ விஶ்வகர்மாவே வாசஸ்பதியாக இருந்து வேதங்களை வெளிப்படுத்தினார் என்றும் இவற்றை பிரம்மா, அதர்வணர், ப்ருகு, ஆங்கிரஸர் மற்றும் ப்ரஜாபதி முதலிய தேவர்கள் மூலமாக வெளிப்படுத்தினார் என்றும் கூறுகின்றது. ஸாமவேத ஜைமினிய வம்ஶ பிராமணமோ ப்ரஜாபதியிடமிருந்து பரமேஷ்டீயும் பின் இவரிடமிருந்து ஸவிதா, அக்நி, இந்திரன், காஶ்யபர், ஶ்ருங்கி, ஶௌநகர், ஆத்ரேயர் இறுதியாக வ்யாக்ரபாத் முதலியவர்களிடம் இருந்து வெளிப்பட்டது என்று கூறுகின்றது. இப்படியாக வேதங்கள் அப்பிராமணங்களில் சொல்லப்பட்ட ரிஷிகளில் வழியே வருகின்ற புரோஹிதக் குடும்பங்களின் வழிவழியாக வாழையடி வாழையாக இன்றுவரை தொடர்ந்து வருகின்றது.

வேதபுருஷனாகிய "விராட் விஶ்வகர்ம பரபிரம்மா"வை குறித்து அனேக ஸூக்தங்களும் மந்திரங்களும் வேதத்தில் விரவிக்காணப்படுகின்றது என்றாலும் அவ்வேதங்களை அறியவும் கற்கவும் ஆர்வங்கள் இன்றுள்ள இப்பிராமண வர்ணத்தில் குறைந்துக் கொண்டுவருகின்றது. மேலும் இதுவரை பாரதீய அளவில் விராட்புருஷராகிய விஶ்வகர்மாவை குறித்த க்ரந்தங்கள் குறைவாகவே வேதத்திலிருந்து தொகுக்கப்பட்டு புத்தகங்களாக வெளிவந்துள்ளது, இது ஒரு மாபெரும் குறையாக இருந்து வருந்துள்ளது. கடந்த 10 ஆண்டுகளாக என்னுடைய மிக கடுமையான முயற்சியின் காரணமாக வேதத்திலுள்ள பல பிரிவுகளிலுள்ள ஸம்ஹிதைகளை பார்த்தும் அவற்றில் விஶ்வகர்மாவை பற்றிய 16 ஸூக்தங்களையும் மற்றுமுள்ள பஞ்சபிரம்ம ஸூக்தங்களையும், பஞ்ச தேவீ ஸூக்தங்களையும் மற்றும் பூஜைகளுக்குண்டான வேத மந்திரங்களையும் தொகுத்து அவற்றிற்கு ரிஷிகள் செய்த ஸூத்திரங்களின் மூலமாக எப்படி "விஶ்வகர்மா"விற்கு ஹோமங்கள் செய்திருக்கின்றார்கள் அவற்றிக்கு எந்தெந்த மந்திரங்களை அப்பொழுது பயன்படுத்தி இருக்கின்றார்கள் (ஆதாரம் போதாயன ரிஷியின் ஸூத்திரம்) என்று பலவாறு ஆராய்ந்து ஸர்வ வேதங்களின் சாரம்ஸமாக இன்று இந்த "சதுர்வேதீய விஶ்வகர்ம ஸம்ஹிதா" என்ற இந்நூலினை தொகுத்துள்ளேன். இவற்றை தொகுத்த ஶாகைகளின் பெயர்களையும் கொடுத்துள்ளேன். ஆகவே அம்மந்திரங்களை வைதீக பிராமணர்கள் ஶாகை ரீதியாக அத்யாயனம் செய்ய விரும்புவோர் அதன்படியே செய்யலாம். ஏற்கனவே என்னால் தொகுத்து எழுதப்பட்ட மிக பிரசித்தியான நூல்கள்:

1) பிரம்ம வம்ஸ பிராமண பெருமைகள்,
2) பிரம்ம வம்ஸ பிராமண போதாயன ஸூத்திர விதி,
3) பிரம்ம வம்ஸ பிராமண யஜுர்வேத கோஶம்,
4) இரதகார பிராமணர்கள் வரலாறு,

மேற்குறிப்பட்ட நூல்கள் யாவும் பிரசித்தியாக அனைவராலும் பாரட்டும் வகைகளிலும் பயன்படும் வகைகளிலும் இருக்கின்றது. ஆகவே தான் இந்நூலில் இதுவரை புத்தகமாக வெளிவராத பல வேத இரகஸ்யங்களை இதில் தொகுத்துள்ளேன்.

வேதத்தில் தேவர்களின் பதவி மற்றும் அவர்களின் பலன்கள் முதலியவற்றை விளக்கும் நிருக்தத்தில் குறிப்பாக விஶ்வகர்மாவை பற்றி சொல்லுகையில் ஸர்வத்திற்கும் கர்தாவாக நிர்ணயம் செய்யப்பட்டுள்ளார். விஶ்வகர்ம நமஸ்கார மந்திரம், விஶ்வகர்ம ரிஷி பிரார்தனை மந்திரம், வேதிகை மற்றும் குண்டத்திற்கு சொல்லும் மந்திரங்கள், திக்பூஜா மற்றும் ஸ்வஸ்திக மந்திரங்கள், அக்னியை பிரதிஷ்டை மற்றும் நமஸ்காரம் செய்யும் பொழுது சொல்ல வேண்டிய மந்திரங்கள், வேதநாமங்களால் அர்சனை மந்திரம், விஶ்வகர்ம பஞ்ச பிரம்ம மந்திரங்கள், பஞ்ச சிருஷ்டீக்கான ஆதார மந்திரங்கள், விஶ்வகர்ம ஸப்த ருஷிக்கான ஹோம மந்திரங்கள், விஶ்வகர்ம பஞ்ச பிரம்ம ருஷிக்கான ஹோம மந்திரங்கள், ருக்வேத, க்ருஷ்ண யஜுர்வேத, ஶுக்ல யஜுர்வேத, ஸாமவேத மற்றும் அதர்வண வேதங்களில் செல்லப்பட்ட விஶ்வகர்ம ஸூக்தங்களும் அதன் ஹோம மந்திரங்களும். விஶ்வகர்ம மஹாஆஹுதி, பிராயச்சித்த ஆஹுதி மற்றும் பூர்ணாஹுதி மந்திரங்கள், விராட்புருஷம், பரமாத்மா, பரமாதித்யன், பரமேஷ்டீ, ஹிரண்யகர்பன், ப்ரஜாபதி, பஶுபதி, வாசஸ்பதி, பரபிரம்மா, ப்ரஹ்மாத்மா, புவனஸ்பதீ, ப்ரஹ்மா, விஶ்வகர்மா, யஜ்ஞபதி, அக்னிபதி, ஸர்வபதி முதலிய பெயர்களில் விஶ்வகர்மாவை பற்றிய 16 ஸூக்தங்களும் மற்றும் விஶ்வகர்மணீதேவி, ஆஹுதிதேவி மற்றும் வாக்தேவி ஸூக்தங்களும், மனு, ருபு, த்வஷ்டா, ஶில்பீ மற்றும் தக்ஷா ஸூக்தங்களும், சிறப்புடைய ஶத்ருஜயத்தினை தரும் மஹேந்திர ஸூக்தமும், வாஸ்து பூஜைக்காக வாஸ்தோஷ்பதி ஸூக்தமும், பஞ்சபிரம்மாக்களின் சக்திகளான ஶ்ரத்தாதேவீ, மேதாதேவீ, ரூபாதேவீ, அதிதிதேவீ மற்றும் தக்ஷிணாதேவீ ஸூக்தங்களும், வேதத்தில் சொல்லப்பட்ட சிருஷ்டீ கார்த்தாக்களை பற்றிய ஸாவித்ரீ மந்திரங்கள் மற்றும் கடைசியாக வேதத்தில் முதல் முதலில் தோன்றிய வித்தையாகிய “த்வஷ்ட்ரா மது வித்தை” மந்திரங்கள் மற்றும் “த்வஷ்ட்ரீ ஸாம”மும், வேதத்தில் வேதம் ஆதியில் எந்தெந்த ரிஷிகளின் வழியே வந்தது என்பதைபற்றிய வம்ஶ பிராமணம் மற்றும்

அனைத்திற்கும் இறுதியாக பஞ்ச ஶாந்தி மந்திரங்கள். இவைகள் அனைத்திற்கும் ஆதாரமாக வேத மந்திரத்தின் ரிஷிகளின் பெயர்கள் அதன் சந்தம் மற்றும் மந்திரங்களின் கடவுள் பெயர்கள் அனைத்தினையும் ஆதாரமாக காண்பித்திருக்கிறேன்.

ஆதிபிரம்ம குலேத்தில் பிறந்த இப்பிராமணர்களின் பிரவரம் என்ற பிறப்பின் வழிகள் அனைத்தும் பூர்வம் தேவர்களை மூலமாகக் கொண்டது ஆகும். இதற்கென்றே வேதத்திலிருந்து பூர்வ ரிஷிகளின் நிரூபணம் ஆதாரமாக ருக்வேதத்திலிருந்து காட்டியுள்ளேன். எடுத்துகாட்டாக முதலில் த்வஷ்டாவனின் புத்திர்கள் விஶ்வரூபர், அபூதி புத்திரிகள் த்வஷ்ட்ரீ, ஸாவித்ரீ, ஸரண்யூ, உஷா, வாதா மற்றும் வாக். பூர்வமனுவின் புதல்வர்கள் மரீசி, அத்ரி, ஆங்கிரஸர், புலஹர், புலஸ்தியர் மற்றும் இந்திராணீ. விஶ்வகர்மாவின் மக்கள்கள் பரமேஸ்டீ, பிரஜாபதி, ப்ரஹ்மா, வாஸ்தோஷ்பதி, ஹிரண்யகர்பன், யஜ்ஞன் மற்றும் மகள் பிரஜாபத்யா இவருடைய தந்தை புவனன் தாய் பூமாதேவீ, தாத்தா ஆப்த்யன். ஆங்கிரஸரின் மகன்கள் ப்ருஹஸ்பதி, ஸுதன்வா, காண்வன், ஸம்வர்தன், கோதமன், விரூபன் மற்றும் மகள் ஆங்கிரஸீ. ஸுதன்வாங்கிரஸரின் மகன்கள் ருபு, விப்வான், வாஜன் மற்றும் மகள் வாஜீ. ருபுவின்(ஆர்பவன்) மக்கள்கள் ஸூனு, ஶவஸா, நபதா, ஶ்ரீமனு முதலியர்கள். பிருஹஸ்பதியின் மக்கள் பரத்வாஜன், கர்கன், குத்ஸன், கார்கேயன், காடகன் மற்றும் பாரத்வாஜீ, ராத்ரீ. ஶில்பகாஶ்யபரின் மக்கள் மித்ரன், வருணன், ஆர்யமான், அம்ஶுமான், பகன், இந்திரன், விவஸ்வான் மற்றும் மேதா, காஶ்யபீ. இவருடைய மனைவி அதிதி, திதி தக்ஷ-பிரஜாபதியின் மகள்கள். இவருடைய ஸம்பந்தி த்வஷ்டா. இவருடைய பேரன்பேத்திகள் வைஸ்வதமனு, ரைவதமனு, ஸாவர்ணீமனு, சக்ஷுஷமனு, யமன் மற்றும் யமீ ஆவார்கள். தக்ஷபிரஜாபதியின் மருமகன்கள் ருத்திரன், ஸோமன், ஶில்பகாஸ்யபன் மற்றுள்ள பூர்வஸப்த ரிஷிகள் ஆவார்கள். க்ரது மற்றும் கர்த்தமர் முதலியர்கள் தக்ஷ பிரஜாபதியின் உறவினர்கள் ஆவார்கள். இங்ஙனம் வேதத்தில் நம்முடைய பிறப்பிற்க்கு ஆதாரமான தேவர்களின் தோற்றம் மற்றும் கோத்திர பிரவிரம் தெளிவாக காட்டப்பட்டுள்ளது. இப்படிப்பட்ட மிகபெரிய பெருமை இப்பூவுலகில் எந்த வம்ஸத்தினருக்கும் கிட்டாத பேறு நம்மவர்களுக்கு மட்டுமே உள்ளது ஆகும்.

அதுமட்டுமின்றி வேதகாலத்தில் வேதத்தினை நம் குல பெண் ருஷிகள் தங்களின் தபோ வலிமையால் உணர்ந்து கூறிய ஸூக்தங்களும் ஸாம கீதங்களும் நிறைய உள்ளன. **எடுத்துக்காட்டுகளாக:** (ராஷ்ட்ரீ/வாக்) தேவீ ஸூக்தம்

த்வஷ்டாவுக்கும் ஆம்பிண்யாவுக்கும் பிறந்த மகள் வாக் ருஷிகாவால் சொல்லப்பட்டது, த்வஷ்டாவுக்கும் ரூபாவிற்கும் பிறந்த மகள் த்வஷ்ட்ரீ ருஷிகாவால் சொல்லப்பட்டது ரூபா ஸூக்தம் இது பிரஜைகளின் உயிர் வடிவமைப்பினை செய்யும் பெருமையை கூறுகின்றது மற்றும் ஸாமவேதத்திலுள்ள த்வஷ்ட்ரீ ஸாமம். ஒருமுறை இந்திரன் விருத்திரனை அழிப்பதற்காக பல இரவுகள் கண்மூடாமல் விழித்திருந்ததினால் இந்திரனுக்கு கண்ணோய் உண்டானது. இதனால் மிகவும் அவதிக்குள்ளானார். இந்திரனின் குருவாக இருந்த த்வஷ்டாவின் மகளும் விவஸ்வானின் மனைவியுமான த்வஷ்ட்ரீ இவ்விஷயத்தினை அறிந்து இந்திரனுடைய கண்-நோயை போக்கும் மருந்துகளை தங்கள் தபோ வலிமையினால் அறிந்தாள், அவற்றிற்க்கு மேலும் ஶக்தியை தர ஸாமவேத மந்திரங்களை கீதமாக பாடி இந்திரனுக்கு வைத்தியம் செய்தாள். இதனால் இந்திரன் பகலிலும் இரவிலும் பார்க்கும் பார்வை பெற்றான். இறுதியில் யுத்தத்தில் விருத்திரனை கொன்றார். இச்செயலால் மிக மகிழ்ச்சியடைந்த இந்திரன் த்வஷ்டாவின் மகளான த்வஷ்ட்ரீக்கு ஸோமயாகத்தில் மூன்றாது தினம் நிகழும் மஹாஅவிர்பாகங்களை பெறும் வரம் அளித்தார் என்று தாண்டய-பஞ்சவிம்ஶ பிராமணம் விளக்குகின்றது. த்வஷ்டாவின் மகள் ஸாவித்ரீ, இவள் ஸவிதாவின் மனைவி, இவளுடைய மகள் ஸூர்யாவை ஸூர்யனுக்கு விவாஹம் செய்து தரும்பொழுது சொல்லப்பட்ட ஸூக்தம் தான் வேதவிவாஹ ஸூக்தமாகும். இம்மந்திரங்களை தான் ஹிந்துகளின் விவாஹத்திக் போது சொல்லிநடத்தப்படுகின்றது. ஸூர்யாவின் மகன் விப்ராஜ ரிஷி இவரால் சொல்லப்பட்டது பரமாதித்ய ஸூக்தம், ஶில்பகாஶ்யபரின் மகள் மேதாவால் சொல்லப்பட்ட ஸூக்தம் மேதா ஸூக்தம் அறிவில் உயர்ந்த மேதைகளை பற்றியது ஆகும். மனுவின் மனைவி ஶிரத்தாவால் சொல்லப்பட்ட ஸூக்தம் தான் ஶ்ரத்தா ஸூக்தம் இது பணிவுடையவர்களின் பெருமையைப் பற்றியது. தக்ஷனின் மகள் தாக்ஷாயணியால் சொல்லப்பட்ட ஸூக்தம் தான் அதிதி ஸூக்தம். தக்ஷனின் மனைவி தக்ஷிணாவில் சொல்லப்பட்ட ஸூக்தம் தான் தக்ஷிணா ஸூக்தம். கர்த்தம-பிரஜாபதியின் மகன் ஆனந்த ரிஷியினால் சொல்லப்பட்டது ஶ்ரீ ஸூக்தமாகும், பரத்வாஜரின் மகள் பரத்வாஜீ ராத்திரீயால் சொல்லப்பட்டது ராத்ரீ ஸூக்தம் ஆகும். இதிலிருந்து பின் தோன்றிய ஸூக்தம் தான் துர்கா ஸூக்தமாகும். யஜுர்வேதத்திலுள்ள ஶ்ரீருத்திர பிரஶ்னத்திற்கு ருஷியின் நிர்ணயம் வேதத்திலே சொல்லப்பட்ட விஶ்வகர்ம ரிஷியின் புத்திரகளாகிய பரமேஷ்டீ, பிரஜாபதி ருஷிகள் ஆவார்கள். சிலர் அகோர ரிஷியன்னு சொல்லுவதர்க்கு வேதத்தில் ஆதாரம் கட்டாயம் கிடையாது. மேலே காண்பிக்கப்பட்ட வேத ஆதாரங்களிலிருந்து ஸ்ருஷ்டி கார்த்தாக்களின் பெண் ரிஷிகாக்கள் வேதத்தில்

அபாரமான வேத ஞானத்தினை பெற்றுள்ளமைக்கு மிகபெரிய சான்றாக உள்ளது. ஆகவே இதிலிருந்து நாம் தெரிந்துக் கொள்வது பிராமண வர்ணத்திலே **“தேவப்ராஹ்மணாய நம:”** என்ற அமரகோஷத்தினையுடைய நம் ஆதிபிரம்ம குல ஆண்களும், பெண்களும் கட்டாயம் வேதத்தினை பயிலவும் கடைப்பிடிக்கவும், தன்னுயிரினும் மேலாக பாதுகாத்து போற்றிவர கட்டாயம் வேண்டும்.

வேதத்திலே மிக சிறந்த ஸாவித்ரீ அல்லது விப்ஶ்வாமித்ரீ அல்லது காயத்ரீ என்ற பெயரில் உள்ள மந்திரமானது பிராமண வர்ணத்தை கடைப்பிடிப்பவர்களுக்கு மிகமுக்கியமானது ஆகும். இம்மந்திரத்தினை உபதேசித்த ருஷி விப்ஶ்வாமித்ரர் இவர் ருபுகணத்தில் வருகின்றவர் ஆவார். இவருடைய மூல பிரவிரம் ருபுக்ஷணனின் மகன் ஸௌனு-ரிஷி, இவர் மகன் குஶிக-ரிஷி, இவர் மகன் காதிந-ரிஷி, இவர் மகன் விப்ஶ்வாமித்ர-ரிஷி ஆவார். மேலே கூறிப்பிட்ட ரிஷிகள் அனைவரும் க்ஷத்ரிய தர்மங்களை வகுத்தவர்ளே அன்றி நாட்டை ராஜ்யம் செய்யும் ராஜாக்கள் அன்று, சில பிராமண போலிகள் தப்புப்ஶ்லோகம் சொல்லி இவர்களை க்ஷத்ரியர் என்றும், க்ஷத்ரியர்கள் பிராமணர்களுக்கு வேதமூல மந்திரத்தினை உபதேசம் செய்யதுபோல தவறான கதையை கற்பித்துவிட்டார்கள், இதுமட்டுமின்றி ஶாங்காயன ரிஷி, போதாயன ரிஷி, மானவ ரிஷி முதலியவர்களுடைய ஸூத்திரத்தில் ஸாவித்ரீ மந்திரமானது பிராமணனுக்கு காயத்ரீ சந்தஸிலும், க்ஷத்திரியனுக்கு த்ரிஷ்டுப் சந்தஸிலும், வைஶ்யனுக்கு ஜகதீ சந்தஸிலும் தனிதனி மந்திரமாக நிர்ணயித்துள்ளார்கள் இவ்வாதாரங்கள் யாவும் வேத காலத்திலிருந்து வருபவையாகும். **இவ்வித பேதங்களை அறியாத போலி பிராமணர்கள் வேதத்திற்க்கு அபசாரம் ஏற்படும் வகையில் அனைவரும் “தத்ஸவிதுர்வரேண்யம்” என்ற காயத்ரீ சந்தஸில் அமைந்த ஸாவித்ரீ மந்திரத்னை ஜபிக்கலாம் என்று பிரசாரம் செய்கின்றார்கள். அதுமட்டுமின்றி சதுர்வேதங்களிலும் காயத்ரீ என்பது ஓர் சந்தமே (பண்) அன்றி ஒரு தேவதை கட்டாயம் கிடையாது.** இப்படிப்பட்ட சிறப்புகளை வேதத்திலுள்ள ஆதாரங்களுடன் காட்டப்பட்டுள்ளது என்பது நாம் மிகபெருமைப்பட வேண்டிய விஷயமும் கூட.

ப்ரஹ்மத்தையுணர்ந்த உண்மையான பிராமணர்கள் வேதத்தில் சொல்லப்பட்ட அனைத்து தேவர்களையும் பரபிரம்மத்தின் மறுவடிவமாகவே உரைப்பார்கள். இதனையே ருக்வேதம் 1-மண்டலம், 164-ஸூக்தம், 46-மந்த்ரத்தில் ருஷி: தீர்கதமஸ் “ஏகம் ஸத்3 விப்ரா ப3ஹுதா4 வத3ந்தி” அதாவது “கடவுள் என்று உணரக்கூடிய பரபிரம்மமே அனைத்து வடிவமாகி அனைத்து

பெயர்களிலும் இருந்து அனைத்து கர்மாக்களையும் செய்கின்றார்" என்று நிரூப்பிக்கின்றார். இக்கருத்தினையே கௌத்யாயணீ ருஷியும் யஜுர்வேத்தில் உரைக்கின்றார். மேலும் யஜுர்வேத பரபிரம்ம ஸூக்தத்தில் தொடங்கும் "ருசம் அக்ஷரம்" என்ற ருக்மந்திரத்தினை சொல்லியவர் ருஷி தீர்கதமர் கக்ஷீவாந், இவர் ருக்வேதத்தில் மண்டலம்1- ஸூக்தம் 164- மந்திரம் 39ல் இம்மந்திரத்ததினை "அஸ்ய வாமஸ்ய" ஸூக்தத்தில் விளக்கமாக குறிப்பிடுகின்றார். இந்த ஸூக்தம் தான் ருக்வேதத்திலே சொல்லப்பட்ட மிகபெரிய ஸூக்தமாகும். மேலும் அதர்வண வேதத்தில் காண்டம் 9- ஸூக்தம்-10, மந்திரம்-18ல் விளக்கமாக பிரம்மாவே உபதேசிக்கின்றார். அப்பரம்பொருளை பல பெயர்களில் அழைக்கப்பட்டாலும் இறுதியாக "விஶ்வகர்மா"வே முழுமுதற்கடவுள் என்றே சதுர்வேதங்களும் நிர்ணயிக்கின்றன. அப்படிப்பட்ட பரபிரம்மத்தினை மூடத்தனமுடைய இப்பூலோகவாசிகளால் பூஜிக்கவே இயலாது என்று நான்கு வேதங்களும் சொல்கின்றன. ஆகவே உண்மையான ப்ரஹ்மத்தினை அறிந்த/உணர்ந்தவர்களால் மட்டுமே அவரை வழிபட முடியும் என்றும், அப்படி பூஜித்தால் வேதத்திலுள்ள அனைத்து தேவர்களையும் பூஜித்த பலன் இவர் ஒருவரை மட்டும் பூஜிப்பதால் கிடைக்கும் என சதுர்வேதங்களும் உரைக்கின்றன.

தேவர்களின் பிரவரத்திலுண்டாவர்கள் ஆதிபிரம்ம குலத்தவர்கள் என்று அழைக்கப்படுகிறார்கள். பிரம்ம கணத்தவர்கள், ஆங்கிரஸ கணத்தவர்கள், ப்ருகு கணத்தவர்கள், ருபுக்ஷண கணத்தவர்கள், தேவ கணத்தவர்கள் முதலியர்களின் சிருஷ்டிகளுக்கு அதிகர்த்தாவாக வேதத்தில் விளங்கிடும் பஞ்ச பிரம்மாக்களாகிய மனு, ருபுக்ஷன், த்வஷ்டா, ஶில்பகஶ்யபர் மற்றும் தக்ஷா ஆகியோர்களுக்காக பூஜா விரத நாட்களாக வேதகாலத்திலிருந்தே கிட்டதட்ட கி.மு.5000 ஆண்டுகளுக்கு மேலாக அனுஷ்டானத்தில் இப்பிராமணர்களிடமுள்ளது. (பூஜாதினங்களை பாரததேசத்தில் கடைப்பிடித்து வரும் நாட்கள்களில் விவரம் ஆண்டு விவரம் ஆங்கிலம் -2013-14) கீழ்கண்ட அனைத்தும் கட்டயாம் பூஜாவிரத தினங்களாக கடைபிடிக்க வேண்டியவைகள் ஆகும்.

1) மேஷ மாஸம்/சித்திரை: நாள்-12, சித்ராபௌர்ணமீ, ஏப்ரல்-25-2013 தேதி அன்று தேவபுரோஹிதர்களின் ஜகத்குரும் பிரஜாபதியுமான **"த்வஷ்டா-பூஜா"** விரத தினமாகும். அன்று சித்ரகுப்தன், பூர்ணிமா பூஜாதினமும் ஆகும். பூஜையின் பலன்கள்: அறிவும் அழகும் வீரம் உடைய புத்திரர்கள். அரசு ஆட்சியதிகாரம் பெறுதல், தம்பதி ஆயுள் அபிவிருத்தி.

2) ஸிம்ம மாஸம்/ஆவணி: நாள்-25, பஞ்சமி திதி, ஆகஸ்ட்டு-10-2013 தேதி அன்று தேவதக்ஷரும் இரதகாரர்களின் ஜகத்குருவுமாகிய **“ருபுக்ஷண- பூஜா”** விரத தினமாகும். அன்று “ருபுக்ஷன், விப்வா, வாஜன், ஆங்கிரஸர், ப்ருகு மற்றும் வேதத்திலுள்ள ஸானகாதி ரிஷிகள், ஸப்தருஷிகள்” அனைவருக்கும் பொதுவாக ரிஷிபஞ்சமியை பூஜாதினமாக கொண்டாடுகின்றார்கள். பூஜையின் பலன்கள்: வண்டிவாகனங்கள் காலிகன்றுகள் அபிவிருத்தி, உண்மையான நட்பு புகழ், விஞ்ஞான அறிவு வளர்ச்சி, பெற்றோரிடம் அன்பு, மருத்துவம் மற்றும் உலோகம், உயிரின வளர்ச்சி ஆய்வுகள்.

3) கன்னி மாஸம்/புரட்டாசி: நாள்-1, த்ரியோதசி திதி, செப்டம்பர்-17-2013 தேதி அன்று வேதகால தேவசில்பியும் சில்பிகளின் ஜகத்குருவுமாகிய சில்ப-காஸ்பருக்கும் மற்றும் புராணகாலத்தில் இரண்டாவது பிரம்மாவாக விளங்கிய தேவசில்பிக்கும் சேர்த்து **“விப்ஶ்வகர்ம-பூஜா”** விரத தினமாக பாரதீ அளவில் அனைவராலும் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றது. பூஜையின் பலன்கள்: சிறந்த பொறியியல் நூட்ப அறிவு, அனைத்திலும் முதன்மை இடம் பெறுதல், பஞ்ச பூதங்களின் நிலை அறிதல், கிரஹ ஆய்வு, இரசாயன தொழில் நூட்ப அறிவு.

4) கன்னி மாஸம்/புரட்டாசி: நாள்-27, நவமி திதி, அக்டோம்பர்-13-2013 தேதியன்று தேவராஜனும் பூர்வமனுவாதிகளின் ஜகத்குருவாகிய **“மனு- பூஜா”** விரத தினமாக சிறப்புடைய பெயரில் ஆயுத பூஜையாக கொண்டாடப்படுகின்றது. பூஜையின் பலன்கள்: எதிரிகள் விலகல், வேளாண் அபிவிருத்தி, தொழில் அபிவிருத்தி.

5) கடக மாஸம்/ஆடி: நாள்-6, பல்குனி(பூரம்)நக்ஷத்திரம் வரும் பௌர்ணமியன்று, ஜூன்-22-2013 தேதியன்று, தேவப்ராஹ்மணர்களின் தலைச்சிறந்த பிரஜாபதியும் ஜகத்குருவுமாகிய **“தாக்ஷாயண-பூஜா”** விரத தினமாகும். பூஜையின் பலன்கள்: தங்கம், வெள்ளி, நவரத்தினங்கள் மற்றும் ஆடை அணிகலன்கள், வருவாய் அபிவிருத்தி, ஆயுஷ் அபிவிருத்தி, புத்திர அபிவிருத்தி, ஸுவர்கலோக பதவி.

இதுமட்டுமின்றி ருக்வேதமானது “மஹாகுலத்தவர்கள்” என்றும், யஜுர்வேதமானது “ஸ்வயம்-ப்ரஹ்ம வம்ஶத்தினர்கள்” என்றும், ஸாமவேதமானது “ஆச்சார்ய குலத்தினர்கள்” என்றும், அதர்வணவேதமானது “ப்ருகுவாங்கிரஸ குலத்தினர்கள்” என்றும் வேதோக்கமான குல நாம தேயங்களை இப்பிரம்ம வம்ஶ

பிராமணர்கள் பெற்றுள்ளார்கள் என்பது யாருக்குமே கிடைக்காத பேறுராகும். அதுமட்டுமின்றி உபவேதமாகிய ஶில்பவேதங்களிலும், இதிஹாசபுராணங்களிலும், கார்க்கேய ஆகமத்திலும் "ஆதிப்ரஹ்ம குலத்தவர்கள்" என்ற மிகசிறப்புடைய நிர்ணயங்கள் வகுக்கப்பட்டுள்ளது. இப்படிப்பட்ட வேதபுருஷனின் த்யானிக்கும் இப்பிராமணர்களுக்கு பாரதீய அளவில் "விஶ்வபிராமணர்" என்பது ஒரு அடையாள பெயராக புராணகாலத்திலிருந்து வருகின்றது.

இதை தவிர்த்து பரபிரம்மவின் பெயரையே தங்களுக்கு பட்டப்பெயராக வைத்திருப்பது என்பது மஹாபாவம் ஆகும். "விஶ்வகர்மா" என்பவர் வேதத்தில் ஸர்வதேவர்களுக்கும் கர்த்தாவே அன்றி நம்மைபோன்ற இப்பூவுலக வாசிகளான பிராமணன் அல்ல. இனியாவது இப்புத்தகத்தினை படிக்கும் ஒவ்வொரு ஆச்சாரியரும் தங்களுடைய வகுப்பு பெயரினை தயவு செய்து ஜாதி சான்றிதழில் "விஶ்வபிராமின்" என்பதினை கட்டாயம் கேட்டு வாங்க வேண்டும். ஆதிப்ரஹ்ம குலத்தில் பிறந்தவர்களாகிய நம்மவர்களை அடுத்தவர்கள் நீ யார் ? என்று கேட்டால் தயவுச் செய்து **"நான் விஶ்வகர்மா"** என்று சொல்லாதீர்கள். நம்மவர்கள் பிராமண வர்ணத்தில் ஒரு பிரிவினைச் சார்ந்த குலத்தவர்களே அன்றி நாம் தேவர்கள் அல்ல தேவர்களின் பிரவரத்தில் உண்டானவர்கள் என்பதை நாம் அனைவரும் கட்டாயம் அறிந்திருக்க வேண்டும். வகுப்பு சான்றிதழ் வாங்குவதின் விவரம்: அரசு ஆணை நிலை எண்: 7ல் பிற்பட்ட பிரிவின் நலத்துறை வரிசை எண்: 47ன் படி (24.1.2006 தேதி) "விஶ்வபிராமணர்" என்றுள்ளது.

இதிஹாஸபுராணங்களில் வ்யாஸர் வேதத்தை வகுத்தார் என்று ஶ்லோகங்களில் கூறப்பட்டுள்ளது என்றாலும் வேதத்தில் ஒரு இடத்தில் கூட வ்யாஸர் வேதங்களை வகுத்தார் என்று மந்திரங்களோ, பிராமாணங்களோ இல்லை. அதுமட்டும் இன்றி வேதாச்சாரியர்களின் பெயர்களை குறிப்பிடும் பொழுது வம்ஶ பிராமணங்களில் இவருடைய பிரவரமே கோத்திர மூலத்திற்கான பெயரோ இல்லை. ஆனால் ஸாமவேதியர்கள் அனுஷ்டிக்கும் வஜ்ரஶூஸிகோபநிஷத்தில் வ்யாஸர் தாய் மஶ்சகேந்தீ என்றும் மீன் வியாபாரம் செய்பவள் என்றும், விவாஹம் ஆகுவதற்கு முன்னே தவறானமுறையில் உண்டானவர் என்றும் ஆதாரமுள்ளது. அதுமட்டுமின்றி ஸாமவிதானத்தில் இறுதியாக ஓரிடத்தில் கூறிப்பிடப்பட்டுள்ளார் எனினும் ஜைமினியம், தளவாகரம், தாண்டீயம், ஆருஷேயம், ஷட்விம் ஶம் முதலியவற்றில் வேதகுரு பாரம்பரித்தினை குறிப்பிடுகையில் இவருடைய பெயரில்லை. ஆகையால்

ஸாமவிதானத்தில் சேர்க்கப்படுள்ளது என்பது வேதபிராமாண காலத்திற்க்கு மிக மிக பிற்பட்ட புராணகாலத்தில் சேர்க்கப்பட்டுள்ளது என்பது நன்கு தெளிவாகின்றது. இவரைப் பற்றிய சிலகுறிப்புகள் 2000க்கு பிற்பட்ட காலத்திய ஶ்லோக குறிப்புகளே. இவர் இதிஹாஸபுராணங்களை மட்டும் முழுமையாக நம்பி அனுஸரிப்பவர்களின் குருவேயன்றி இவர் வேதத்திற்கு பிரதான குரு முற்றிலும் கிடையாது. ஆகவே ஶ்லோகங்களால் எழுதிப்பட்டவைகளை வேதங்களுக்கு அதிகாரபூர்வமான ஆதாரமாக எடுத்துக்கொள்ளவும் கூடாது. அப்படி இருப்பின் அவைகள் அனைத்து தனிப்பட்ட கருத்துகளே அன்றி அவைகள் வேதத்தினுடைய நிர்ணயம் அன்று.

ஸத்யமயமான மந்திரங்களை கொண்ட வேதம் என்ற மிகஉயர்ந்த தர்ம மூலஸ்வரூபமே நம்முடைய உயிருள்ள உடலாகும், நம் மானத்தினை காக்கும் உடையே வேதபிராமணங்கள், நம் உயிரைக்காக்கும் உணவும், நீரும் வேதத்திலுள்ள ஆரண்யக உபநிஷத்துகளும் ஆகும், நாம் அணியும் ஆபரணங்களே நம்மை அலங்கரிக்க ஸமயவழியில் பிற்காலத்தில் உருவாகிய ஸ்லோக கருத்துகள் என்றும் நமக்கு தெளிவாக புலனாகும். ஆகவே நம்மை அலங்கரிக்கும் ஆபரணங்கள் பல ரூபங்களில் இருக்கலாம் அல்லது அவைகள் தேவையில்லாமலும் போகலாம், ஆனால் ஓருயிர் வாழ இன்றியமையாத உணவு, உடையும் ஒரு சரீரத்திற்கும் மிக அவசியம். அதுமுதலில் சரியாக கிடைக்க வேண்டும் எனில் விஶ்வபிராமணர்கள் அனைவரும் வேதத்தினை பயில வேண்டும். அப்படி பயில்வதால் நமக்கு கிட்டுவது ப்ரஹ்ம ஞானம். இந்த ஞானத்தினால் இவ்வுலகில் நிலையான இடத்தினை நாம் அனைவரும் பெற்றுவிடலாம் என்பதே வேதத்திங்களின் கருத்தாக உள்ளது. அதாவது பிரம்மத்தினை உண்மையாக உணர்வதால் கிட்டும் நிலையான பேறு ஆகும். இப்படியாக நரர்களாக விளங்கிய ஆங்கிரஸ ரிஷியின் பேரன்களாகிய ருபுக்கள் தங்களுடைய ப்ரஹ்ம ஜ்ஞானத்தினால் தேவர்களிடம் அமிர்தமுண்டு தேவர்களின் பதவியை அடைந்தார்கள் என்பதை போற்றி ருக்வேதம் சொல்லும் 11 ஸூக்தங்களும் நம்மவர்களுக்கு சாக்ஷியாக விளங்குகின்றது.

இந்நூல் கட்டாயம் வேதோக்தமான அனைத்து அனுஷ்டானங்களிலும் புரோஹிதார்கள் அனைவருக்கும் பயன்படும் என்ற நம்பிக்கையில் இந்நூலினை என்னுடைய தாய் கல்யாணி, தந்தை மகா.சேகராச்சாரியார் ஆசீர்வாதத்துடனும் மற்றும் என்னுடைய சகோதரர்கள் சந்தோஷ்சர்மாM.Sc., அருண்சர்மாM.A.Lit அகியோர்களின் அன்பான ஊக்கத்தினாலும், ஆதிசங்கராச்சாரியா,

ஆதிசிவலிங்காச்சார்யா மற்றும் கமலமூர்த்திஸ்வாமிகள் முதலிய ஜகத்குருக்களின் அருளோடும் இதை என்னுடைய விவாஹ தினத்தில் வெளியிடுகின்றேன். தம்பதிகளாகிய ஸுரேஷ்சர்மாM.B.A, ஸூர்யாB.E., ஆகிய எங்களை என்றென்றும் உங்களுடைய ஆசீர்வாதம் நல்கும் படி கேட்டுக்கொண்டு, இந்நூலினை சதுர் வர்ணத்தில் பிறந்த அனைவர்களுக்காகவும் வெளியிடுகிறோம். இப்பரபிரம்மாவை பூஜிப்பதினாலும் இவருடைய வேத மந்திரங்களை பாராயணம் செய்வதினாலும் உயர்ந்த பறிபோகாத பதவியையும், அழியாத செல்வத்தினையும், நிலைபேறுக் கொண்ட கல்வியையும் மற்றும் ஸகல சிறப்புகளையும் அடைவார்கள் என்பதே நான்கு வேதங்களும் சொல்லும் உண்மையாகும்.

வளர்க ஒற்றுமை, வளர்க வேதநெறி, வளர்க பிராமணீயம்.
ஸர்வம் விஸ்வகர்மார்பணமஸ்து.

இப்படிக்கு ப்ரஹ்ம வம்ஶ ப்ராமணீயத்திற்காக,
ஆதிப்ரஹ்ம குலோ ஜாத:
ஏகாருஷேய பிரவிரான் வித: ஸாநக ரிஷி கோத்ர:
ருக்வேதீய பாஷ்கள ஶாகத்யாயீ:
ஶில்பவேதீய விஶ்வகர்ம ஶாஸ்த்ராந் வித:
ஶாங்காயந ஸூத்ர:
சதுர்வேதீய விஶ்வகர்ம ஸம்ஹிதாச்சார்யா,
ஶாங்காயன ரிஷி வேத பாடஶாலா ஸ்தாபகர்,
ஶ்ரீ விஶ்வகர்ம ப்ரயோக நிபுணத்வா
ஸத்யோஜாத ப்ரஹ்மஶ்ரீ T.M.S. ஸுரேஷ் ஶர்மா M.B.A,.
12- குப்புதாசன் தெரு,
இராசிபுரம் -637408.
நாமக்கல் மாவட்டம்.
செல்: 9943356717.

இப்படிக்கு ப்ரஹ்ம வம்ஶ ப்ராமணியத்திற்காக,
ஆதிப்ரஹ்ம குலோ ஜாத : ஏகாருஷேய பிரவிரான் வித: ஸாநக ரிஷி கோத்ர:
ருக்வேதீய பாஷ்கள ஶாகத்யாயீ: ஶில்பவேதீய விஶ்வகர்ம ஶாஸ்த்ராந் வித:
ஶாங்காயந ஸூத்ர: சதுர்வேதீய விஶ்வகர்ம ஸம்ஹிதாச்சார்யா,
ஶாங்காயன ரிஷி வேத பாடஶாலா ஸ்தாபகர்,
ஸ்ரீ விஶ்வகர்ம ப்ரயோக நிபுணத்வா
ஸத்யோஜாத ப்ரஹ்மஸ்ரீ T.M.S. ஸுரேஷ் ஶர்மா M.B.A.,
12- குப்புதாசன் தெரு, இராசிபுரம் - 637408.
நாமக்கல் மாவட்டம். செல்: 9943356717.

இந்நூல் வெளிவர ஊக்கப்படுத்தியவர்கள் :

பிரம்மஸ்ரீ சந்திரசேகராச்சாரியா,
லண்டன். செல்: 447834953285.

ஸ்ரீ வரதராஜ வேத ஆகம பாட சாலை,
பிரம்மஸ்ரீ வரதராஜாச்சாரியா,
பெரியராஜ கோபுர வீதி, ஸ்ரீரங்கம்.
செல்: 9443193540.

பிரம்மஸ்ரீ எம்.வி.நரஸிம்ம சில்பாச்சாரியா,
1, 2-வது தெரு, குரோம்பேட்டை, பாஸ்சியம் நகர்,
சென்னை - 44. செல்: 9840500256.

பிரம்மஸ்ரீ கே.பி. உமாபதி ஆச்சார்யா,
60/80- மேட்டுத்தெரு, கும்பகோணம்- 612001.
செல்: 9944532723.

பிரம்மஸ்ரீ நாகேஸ்வரா ராவ் ஆச்சாரியா,
மஹாமஹா உபாத்தியா,
தென்னிந்திய விஸ்வபிராமண ஸம்ஸ்கிருத வித்யாபதி,
ஹைதராபாத். செல்.09949486529.

ஸ்ரீ சாங்காயனரிஷி வேதபாட சாலையின் உறுப்பினர்கள்:
பிரம்மஸ்ரீ மாணிக்கமுருகாச்சாரியா,
மங்கலம்பேட்டை. செல்: 9788798828.
பிரம்மஸ்ரீ லோகநாத ஆச்சாரியா,
குடவாசல். செல்: 9976089030.

பிரம்மஸ்ரீ கிருபாகராச்சாரியா, சேலம். செல்: 8883318878.
பிரம்மஸ்ரீ சண்முகாச்சாரியா, மேட்டூர். செல்: 9443903776.
பிரம்மஸ்ரீ ஆறுமுகாச்சாரியா, சேலம். செல்: 8189895426.







Sri Virat Viswakarma Parabrahmane Namaha
*Sri Jagadguru Aghila Bharatha Viswakarma Peetathipathi*
**SRI SIVASHANMUGA GNANACHARYA GURUSWAMIGAL**

**Adhi Sivalingacharia Peetam**
**64th Mahasannithanam**
Seenandal Mutt
Thirumularanyam - 606 901
Cell : 9442410920

**Parasamaya Kolarinatha Adhinam,**
**38th Matathipathi**
84, Akkasalai Vinayakar Koil Street,
Tirunelveli - 627 006.

தேதி : 18-07-2013
முகாம் : திருவண்ணாமலை

[illegible]

[illegible]

[illegible]

**அனுக்ரஹ ஆசீர்வசனம்**

வேதவேத மந்த்ரம் சதுர்வேத ஸம்ஸ்தாபனம் மூலப்ரவசனம் சாஸ்வத மானம்
ஆதாரபூர்வம் க்ரமேண நிர்ணயம் விஸ்வகர்ம ப்ரபாவம் கரிஷ்யே
ஆசார நிர்மிதம் கமனம்சதா காலகமனம் நித்யம் ததாமி
ஆதாரமனஸம் நிர்மிதம் சதா சதாகால ஸ்மரணம் நித்யம் ப்ரபத்யேத்
விசாரமமலம் மமபுத்ரம் சுரேஷேக்ர சர்மசீலம்
அனேக க்ர்மவிசாரம் மனஸம் மஹத் ஆசீர்வசன பூர்வம்
ததாமி அனுக்ரஹம் ஸ்ரீ விஸ்வேஸ்வர சித்திமானம் அமலம் மஹது
ஆதிவிதுத சதாசர்வம் அகிலபுவனம் ஸ்ரீ விஸ்வகர்மம்! அனேக நல்லாசிகள்!

ஸ்ரீமாத்ரே நம:

"அனந்தா வை வேதா:" வேதங்களில் எண்ணிறந்தவை என்றாலும் ரிஷிகள் நமக்காக சிலவற்றை தான் பிடித்துக்கொடுத்துள்ளார்கள். நம்முடைய இகபர நலனுக்கும் லோக க்ஷேமத்திற்காகவும் இந்த அளவிற்க்கு போதுமாக இருக்கட்டும் என்று அருளியுள்ளார்கள். ஒவ்வொரு வேதங்களிலும் அநேக பாடல்களும், பாடபேதங்களும் உண்டு. இதற்கு பாடாந்திரம் ஒவ்வொன்றும் ஒரு சாகை என்றும் சொல்வதுண்டு. சாகைகள் என்றால் கிளைகள் என்று சொல்வதுண்டு.

வேத விருக்ஷத்தில் கிளைகளாக சாகைகள் விளங்குகிறது. ஒரு மரத்தில் எப்படி இலைகள், காய்கள், கனிகள் மற்றும் பூக்கள் எப்படி உள்ளதோ அப்படியே தான் அநேக கிளைகள் நிறைந்த மஹாவிருக்ஷத்தில், இராசிபுரம் ஸுரேஷ்சர்மா அவர்கள் சதுர்வேத கிளைகளிலுள்ள ஆதாரங்களை ஆராய்ந்தும் பர்த்தும் நம்பிக்கையில் அளித்துள்ளார். இந்தவேத கனிகளை சுவைத்து அனுபவித்தவர்களுக்கே இதன் பெருமைகள் நன்றாய் விளங்கும். அவர் இன்னமும் அநேக வேத விருக்ஷங்களில் உள்ளவைகளை ஆராய்ந்து ஸமுதாயத்திற்கும் மற்றும் வைதீக ஆன்மீக உலகிற்க்கு அளிக்க வேணுமாய் குருவருளையும் இறையருளையும் வேண்டுகிறேன்.

அன்புடன்,<br>
பிரம்மஸ்ரீ ஜோதி முருகாச்சாரியார்,<br>
ஸ்ரீ காளிகாம்பாள் திருக்கோயில்,<br>
பேரிப்பேட்டை,<br>
வேலூர்-4.





ஸ்ரீகுருப்யோன் நம:<br>
ஸ்ரீவிஶ்வேஶ்வராய மங்களம்

அணிந்துரை.

இப்பாரத பூமியில் அனாதி காலம் தொட்டு வேதத்தை ஆதாரமாக ஆணி வேராக கொண்டது நம் இந்து மதம். வேதத்தில் சொல்லாத தர்மங்களே இல்லை. வேதங்களில் அநேக ஶாகைகளில் விஶ்வப்ராஹ்மண ஸமூகத்தவர்கள் பற்றி பல இடங்களில் சொல்லப்பட்டு உள்ளது. வேதத்தை முறையாக அப்யாஸம் செய்தவர்களுக்கு இந்த விஷயம் தெள்ளத்தெளிவாக புரிந்திருக்கும்.

அப்படிப்பட்ட பல விஷயங்களை கடந்த பத்து ஆண்டுகளாக சிரமப்பட்டு தேடி எல்லாவற்றையும் தொகுத்து ஒரு நூலாக வெளியிடுவது என்பது மிக மிகச்சிறந்து. செல்வன் சிரஞ்சீவி ஸுரேஷ்ஶர்மா அவர்கள் ஞான மார்க்கமான இந்த பெரிய சாதனையை செய்துள்ளார்.

வேதத்தில் கர்ம மார்க்கமான அரிய பல விஷயங்களை உடைய ஸூத்திரங்களில் உள்ள வாழ்க்கை நெறிக்கு தேவையானவற்றையும் சேகரித்து நம் ஸமூகத்திற்க்கு வழங்கினால் ஸமூகத்தின் பெருமை மென்மேலும் உயரும் என எண்ணுகிறேன். ஸமூகத்தை நேர்படுத்த நம்மால் இயலாது. ஆனால் நம் கர்மானுஷ்டானத்தினால் மிகமிக உயரலாம் என்பது திண்ணம்.

ஞான மார்க்கத்தை நம் ஸமூகத்திற்க்கு அள்ளித்தந்த ஸுரேஷ்ஶர்மா இனி வருங்காலங்களில் கர்ம மார்க்கத்தையும் சேகரித்து அளிக்க, விஶ்வேஶ்வரன் திருவருள் சித்திக்க வேண்டி வாழ்த்துக்கள்.

இப்படிக்கு பிரியமுள்ள,<br>
ஸ்ரீ.வி.தண்டபாணி சர்மா,<br>
537-ஏ, அசோக் நகர், வேங்கிக்கால்,<br>
திருவண்ணாமலை-4.

ஸ்ரீ ஸதாஶிவாய நம:

ஸ்ரீமது ஆண்ட ஶிவஸுப்ரமண்ய பண்டித குருஸ்வாமிகள்.

சான்றோர் குல ஜகத்குரு கருமாபுரம் ஆதீனம், திருச்செங்கோடு,

நாமக்கல்· 637302.

ஆசியுரை:

நமது அன்பிற்க்கு இனிய ஶே.ஸுரேஷ் ஶர்மா அவர்கள் தொகுத்துள்ள "சதுர்வேதீய விஶ்வகர்ம ஸம்ஹிதா" என்ற நூலில் மிகவும் கிடைத்தற்கு அறிய பல விஷயங்களையும் அபூர்வமான செய்திகளையும் தொகுத்துள்ளார். இதை பார்க்கும் பொழுது அவர்கள் உழைப்பும் விடா முயற்ச்சியும் மிகத் தெளிவாக தெரிகின்றது. குறிப்பாக விஶ்வகர்ம பிராமணர்களுக்கு இந்த நூல் ஓர் அரிய பொக்கிசமாக திகழ்கின்றது. பூஜைப் பிரயோகம் மற்றும் அவற்றிற்க்கான விளக்கத்துடன் வெளியிட்டுரப்பது மிகவும் சிறப்பானதே.

அன்பர் இன்னும் இதைப்போன்ற பல நூல்களை தொகுத்து நம் பாரததேசத்திலுள்ள அனைத்து பிராமணர்களுக்கும் அருந்தொண்டு புரிந்து சிறப்படைய வாழ்த்திகிறோம்.

சதுர்வேதத்திலிருந்து பரபிரம்மாவின் நிர்ணயத்தை முதன்முதலில் ஆதாரத்துடன் வெளியிட்டு சிறப்பித்தமைக்கு "விஶ்வகர்ம பிரயோக நிபுணத்வா" என்ற பட்டத்தை வழங்கி வாழ்த்துகிறோம்.

அன்புள்ள,

ஸ்ரீ கருமாபுரம் ஆதீனம்

ஶிவஸ்ரீ ராஜா ஶிவாச்சாரி,

ஸ்ரீ மத் அழகிய சிற்றம் பலகுரு ஸ்வாமி மடம்,

ஶிவஸ்ரீ க. உமாபதி ஶிவாச்சாரி,

ஸ்ரீ கைலாசநாத ஸ்வாமி திருக்கோயில்,

இராசிபுரம்.





ஸ்ரீ வீரமகேஶ்வராய நம:

ஆசியுரை :

அன்புள்ளம் கொண்ட விஶ்வபிராமண பெருமக்களுக்கு நமஸ்காரம், நான்கு வேதங்களிலுள்ள விஶ்வகர்மாவின் ஸ்ருஷ்டீகளின் நிர்ணயம் மற்றும் அவருக்குண்டான பரபிரம்ம த்த்துவ பெயர்கள் மற்றும் அதை நிரூபிக்க 16 விதமான ஸூக்தங்கள் ஆதாரங்களுடன் இந்நூலில் காண்பிக்கப்பட்டுள்ளது.

நான்குவேதங்களில் உள்ள 32 பிரிவுகளில் ஆதாரங்கள் காண்பிக்கப்பட்டு உள்ளது. இதில் விஶ்வபிராமண பாரம்பரியத்தின் நித்யகர்ம அநுஷ்டானங்களுக்கான அனைத்து வித மந்திரங்களும் நான்கு வேதங்களிலிருந்து சல்லடை கொண்டு ஜலித்து எடுத்து சிறப்பாக தொகுக்கப்பட்ட இந்த "சதுர்வேதீய விஶ்வகர்ம ஸம்ஹிதா" என்ற நூலானது இராசிபுரம் ஶே. ஸுரேஷ் ஶர்மா அவர்களால் பிராமண வர்ணத்தில் பிறந்த பெருமக்களுக்கு பெரிய தொரு பொக்கிஷமாக அமைந்தை குருவருளும் திருவருளும் கிடைக்கப்பெற்று யுகங்கள் உள்ள வரை போற்றி பாதுகாக்க வேண்டி ஆஶீர்வாதிக்கின்றேன்.

என் அன்பிற்கினிய தம்பி ஸுரேஷ் ஶர்மாவிற்க்கு பரதத்துவ நிர்ணயத்தை பாரதத்தில் முதன்முதலாக சதுர்வேதங்களிலிருந்து நிரூபித்தமைக்கு "சதுர்வேத விஶ்வபிராமண திலகம்" என்ற பட்டத்தினை கொடுத்து தீர்காயுஷ்வுடன் இருந்து வாழ்வில் ஸகல இன்பத்தினையும் பெற வாழ்துகிறோம்.

இப்படிக்கு பிரியமான,

ஸ்ரீ வீரஶைவ மந்திர கலைமணி,

ஶிவஸ்ரீ டி.கந்தஸ்வாமி ஶிவாச்சாரி,

இராசிபுரம்.

ॐ

# ॥ अथ चतुर्वेदीय विश्वकर्म संहिता ॥

ॐ नमो विराट् विश्वकर्म परब्रह्मणे॥

ॐ सदाशिवाय नमः। ॐ देव्यै नमः। ॐ गणेशाय नमः॥

## ॥ अथ विश्वकर्म संहिता कर्म काण्डः १ ॥

### ॥ अथ प्रथमं अनुवाकः ॥

### ॥ अथ वेदनिरुक्त विधिः ॥

**ऋषिः यास्कः । अध्यायः १० अनुः २५ - २६। देवता विश्वकर्मा ॥**

ॐ **विश्वकर्मा सर्वस्य कर्ता**। तस्यैषा भवति॥

विश्वकर्मा विमना आद्विहाया धाता विधाता परमोत सन्दृक्।

तेषामिष्टानि समिषा मदन्ति यत्रा सप्त ऋषीन्पर एकमाहुः॥ १

विश्वकर्मा विभूतमना व्याप्ता धाता च। विधाता च।परमश्च सन्दृष्टा भूतानाम्। तेषामिष्टानि वा कान्तानि वा क्रन्तानि वा गतानि वा मातानि वा नतानि वा अद्भिः सह संमोसन्ते यत्रैतानि सप्त ऋषिणानि ज्योतींषि। तेभ्यः **परमादित्यः**। भवम्तीत्यधि दैवतं। अथाध्यात्मं।

विश्वकर्मा विभूतमना व्याप्ता धाता च। विधाता च। परमश्च संदर्शयिन्द्रियाणां। एषामिष्टानि वा कान्तानि वा क्रन्तानि वा गतानि वा मातानि वा नतानि वा। अन्नेन सह सं मोसन्ते यत्रेमानि सप्त

ऋषिणानीन्द्रियाणि । एभ्यः **परमात्मा** । तान्यस्मिन्नेनकं भवन्ती

त्यात्मगतिचष्टे । तत्रेतिहासमा चक्षते ।

विश्वकर्मा भौवनः सर्वमेधे सर्वाणि भूतानि जुहवांचकार ।

स आत्मानमप्यन्ततो जुहतांचकार । तदभिवादिन्येषर्ग्भवति ॥

य इमा विश्वा भुवनानि जुह्वदृषिहोता निषासादा पिता नः ।

स आशिषा द्रविणमिच्छमानः प्रथमच्छदवराँ आ विवेशा ॥ २

तस्योत्तराभूयसे निवर्चनाय ।

विश्वकर्मन् हविषा वावृधानः **स्वयं** यजस्व पृथिवीमुत द्याम् ।

मुहयन्त्वन्ये अभितो जनास इहास्माकं मघवा सूरिरस्तु ॥ ३

विश्वकर्मा हविषा वर्धयमानः स्वयं यजस्व पृथिवीं च देवं च

मुहयन्त्वन्ये अभितो जातः सपत्नः इहास्माकं मघवा सूररिस्तु प्रज्ञाता ॥

## ॥ अथ विश्वकर्म नमस्कार मन्त्रः ॥

**ऋषिः कौस्त्यायनिः । छन्दः त्रिष्टुप् । देवता विश्वकर्मा ॥**

त्वं ब्रह्मा त्वं च वै विष्णुस्त्वꣳ रुद्रस्त्वं प्रजापतिः ।

त्वमग्निर्वरुणो वायुस्त्वमिन्द्रस्त्वं निशाकरः ॥ ४

त्वं मनस्त्वꣳ यमस्त्वं पृथिवी त्वꣳ विश्वं खमथाच्युतः ।

स्वार्थे स्वाभाविकेऽर्थे च बहुधा सꣳस्थितिस्त्वयि ॥ ५

विश्वेश्वरा नमस्तुभ्यꣳ विश्वात्मा **विश्वकर्मा** कृत् ।
विश्वभुग् विश्वमायुस्त्वꣳ विश्वक्रीडारतिः प्रभुः ॥ ६
नमः शान्तात्मने तुभ्यं नमो गुह्यतमाय च ।
अचिन्त्याया प्रमेयाय अनादि निधनाय च ॥ ७

## ॥ अथ वेदिका पूजा मन्त्रः ॥

**ऋषिः अथर्वणः भृगुः । छन्दः शक्वरी । देवता विश्वकर्मा भूमि च ॥**

यस्यां वेदिं परिगृह्णन्ति भूम्यां यसयां यज्ञं तन्वते **विश्वकर्माणः** ।
यस्यां मीयन्ते स्वरवः पृथिव्या मूर्ध्वाः शुक्रा आहुत्याः पुरस्तात् ।
सा नो भूमिर्वर्धयद् वर्धमाना ॥ ८

## ॥ अथ कुण्ड पूजा मन्त्रः ॥

**ऋषिः विश्वकर्मा भुवनः । छन्दः पङ्क्तिः बृहती । देवता विश्वकर्मा ॥**

**विश्वकर्मा** त्वा सादयत्वन्तरिक्षस्य पृष्ठे व्यचस्वतीं प्रथस्वतीं
भास्वतीꣳ सूरिमतीमा या द्यां भास्या पृथिवीमोर्वन्तरिक्षमन्तरिक्षं
यच्छान्तरिक्षं दृꣳहान्तरिक्षं मा हिꣳसीः ।
विश्वस्मै प्राणायापानाय व्यानायोदानाय प्रतिष्ठायै चरित्राय वायुत्वाभिपातु
महद्या स्वस्त्या च्छर्दिषा शन्तमेन तया देवतयाङ्गिरस्वद् ध्रुवा सीद ॥ ९

राड्ढ्यसि प्राची दिग्विराडसि दक्षिणा दिग्संराडसि प्रतीची दिग्स्वराडस्युदीची
दिगधिपत्नयसि बृहति दिक्॥ १०

आयुर्मे पाहि प्राणंमे पाह्यपानंमे पाहि व्यानंमे पाहि चक्षुर्मे पाहि श्रोत्रंमे पाहि
मनोमे जिन्व वाचंमे पिन्वात्मानंमे पाहि ज्योतिर्मे यच्छ ॥ ११

विश्वकर्मा त्वा सादयत्वन्तरिक्षस्य पृष्ठे ज्योतिष्मतीं।
विश्वस्मै प्राणायापानाय व्यानाय विश्वञ्ज्योतिर्यच्छ।
वायुस्तेधिपतिः तया देवतयाङ्गिरस्वद् ध्रुवा सीद॥ १२

## ॥ अथ दिग्पूजा मन्त्रः ॥

**ऋषिः विश्वकर्मा आङ्गिरस च। छन्दः पङ्क्तिः। देवता विश्वकर्मा॥**

विश्वकर्मा दिशांपतिः स नः पशून्पातु सोऽस्मान्पातु तस्मै नमः।
प्राणय व्यानायापानाय वाचे त्वा चक्षुषे त्वा तया
देवतयाङ्गिरस्वद् ध्रुवा सीदः॥ १३

## ॥ अथ विश्वकर्म स्वस्ति वाचक मन्त्रः ॥

**ऋषिः वसिष्ठः। छन्दः त्रिष्टुप्। देवता विश्वकर्मा॥**

स नः शिवो भवतु विश्वकर्मा युयं पात स्वस्तिभिः सदा नः॥ १४

## ॥ अथ वास्पतेष्पति सूक्त्तः ॥ वास्तु पूजा मन्त्रः ॥

**ऋषिः ब्रह्मा वसिष्ठर्वा । छन्दः त्रिष्टुप् । देवता वास्तेष्पतिर्विश्वकर्माः ॥**

पत्यस्य स्थूणां पृथिवीं दाधार ऋतेन देवा अमृतं अन्तविन्दन् ।
ध्रुवेण त्वा हविषा धारयांयभि तद् द्यावा पृथिवी गृणीतां ॥ १५
येभिर्होमैः विश्वकर्मा दाधारेमां पृथिवीं मातरं नः ।
तेभिष्ट् वा होमैः इह धारयां ऋतं सत्यं अनु चरन्तु होमाः ॥ १६
इह ध्रियध्वं धरुणो पृथिव्या उशत्या मातुं सुभगाया उपस्थे ।
उपराणुं त्वा महसा मोदमाना अस्मिन् वास्तौ सुप्रजसौ भवाथः ॥ १७
वास्तोष्पते प्रति जानिह्यस्मान् स्वावेशो अनमीवो न एधि ।
यत् त्वेमहे प्रति नस्तं जुषस्व चतुष्पदो द्विपद आ वेशयेह ॥ १८

### ॥ अथ द्वितीयं अनुवाकः ॥

## ॥ अथ विश्वकर्म कलश प्रतिष्ठा मन्त्रः ॥

**ऋषिः अथर्वणः भृगुः । छन्दः त्रिष्टुप् । देवता विश्वकर्मा ॥**

यामन् वैच्छद्धविषा **विश्वकर्मा**न्तरर्णवे रजसि प्रविष्टां ।
भुजिष्यं १ **पात्रं** निहितं गुहा यदाविर्भोगे अभवन्मातृमद्भ्यः ॥ १

## ॥ अथ अग्नि प्रतिष्ठा मन्त्रः ॥

**ऋषिः विरूपः आङ्गिरसः। छन्दः त्रिष्टुप्। देवता विश्वकर्माग्निः॥**

यो अग्निरग्नेस्तपसो अधि जातः शोचात् पृथिव्या उत वा दिवस्परि।

येन प्रजा विश्वकर्मा व्यानट् तमग्ने हेडः परि ते वृणक्तु॥ ॐ भूर्भुवस्सुवः॥ २

## ॥ अथ अग्नि नमस्कार मन्त्रः ॥

**ऋषिः मधुच्छन्दः वैश्वमित्रः। छन्दः त्रिष्टुप्। देवता विश्वकर्माग्निः॥**

मातेव पुत्रं पृथिवी पुरीष्यं अग्निꣳस्वे योनावभारुखा।

तां विश्वै देवैर्ऋतुभिः संविदानः प्रजापतिर्विश्वकर्मा वि मुञ्चतु॥ ३

## ॥ अथ विश्वकर्म पूजाऽर्चन मन्त्रः ॥

ॐ विराट्पुरुषाय नमः विश्वकर्मणे नमः विश्वेश्वराय नमः विश्वात्मने नमः

विश्वरूपाय नमः परब्रह्मणे नमः परमेश्वराय नमः परमादित्या नमः

परमात्मने नमः परमेष्ठीने नमः बृहस्पतये नमः वास्तुपतये नमः

वाचस्पतये नमः भूतपतये नमः रूपपतये नमः प्रजापतये नमः धर्मपतये नमः

यज्ञपतये नमः पशुपतये नमः अन्नपतये नमः महात्मने नमः महेश्वराय नमः

महेन्द्राय नमः जगत्गुरुवे नमः स्वयंब्रह्मणे नमः॥ ४

## ॥ अथ विश्वकर्म पंचब्रह्म मन्त्रः ॥

**ऋषिः जमदग्निः। छन्दः त्रिष्टुप्। देवता सद्योजातः॥**

**सद्योजातो** व्यमितीत यज्ञं अग्निर्देवानामभवत् पुरोगाः।

अस्यहोतुः प्रदिश्यृतस्य वाचि स्वाहाकृतꣳहविरदन्तु देवाः॥ ५

**ऋषिः भरद्वाजः। छन्दः त्रिष्टुप्। देवता वामदेवः॥**

**वाममद्य** सवितर्वाममु श्वो दिवोदिवो वाममस्यमभ्यꣳसावीः।

वामस्य हि क्षयस्य देव भूरेरया धिया वाम भाजः स्याम॥ ६

**ऋषिः विश्वकर्मा। छन्दः त्रिष्टुप्। देवता अघोरः॥**

**घोराऋषयो** नमो अस्त्वेभ्यः चक्षुष एषां मनसश्च सन्धौ।

बृहस्पतये महि षद्द्युमन् नमः नमो विश्वकर्मणे स उ पात्वस्मान्॥ ७

**ऋषिः विश्वामित्रः। छन्दः गायत्री। देवता तत्पुरुषः॥**

**तत्पुरुषाय** विद्महे महात्मनाय धीमहि।

तन्नो विश्वकर्मः प्रचोदयात्॥ ८

**ऋषिः गोतमः। छन्दः जगती। देवता ईशानः॥**

**तमीशानां** जगतस्तस्थुषस्पतिं धियं जिन्वमवसे हूमहे वयं।

पूषा नो यथा वेदसामसद् वृधे रक्षिता पायुरदब्धः स्वस्तये ॥ ९

## ॥ अथ तृतीयं अनुवाकः ॥

### ॥ अथ मनु सूक्त्तम्॥

**ऋषिः मानवः गयश्च। छन्दः अनुष्टुप् १ः२ गायत्री ३ त्रिष्टुप् । देवता मनुः॥**

प्रनूनं जातयामयं **मनु**स्तोक्मे व रोहतु। यः सहस्त्रं शताश्वं सद्यो दानाय मंहते॥ १

न तमश्नोति कश्चन दिव इव सान्वारभं । सावर्ण्यस्य दक्षिणा वि सिन्धुरिव पप्रथे॥ २

उत दासा परिविषेस्मद्दिष्टी गोपरीणसा। यदुस्तुर्वश्च मामहे॥ ३

सहस्त्रदा ग्रामणीर्मा रिषन् **मनुः** सूर्ये णास्य यतमानैतु दक्षिणा।

साव र्णे र्देवाः प्र तिरन्त्वायुर्यस्मिन्नश्रान्ता असनाम वाजं ॥ ४

परावतो ये दिधिषन्त आप्तं **मनु** प्रीतासो जनि ता विवस्वतः।

ययातेये नहुष्यस्य बर्हिषि देवा आसते ते अधि ब्रुवन्तु नः॥ ५

येभ्यो होत्रां प्रथमामायेजे **मनुः** समिद्धाग्निर्मनसा सप्त होतृभिः।

त आदित्या अभयं शर्म यच्छत सुगा नः कर्ता सुपथा स्वस्तये ॥ ६

### ॥ अथ ऋभु सूक्त्तम्॥

**ऋषिः मेधातिथिः काण्वाङ्गिरसः। छन्दः गायत्री। देवता ऋभवः॥**

अयं देवाय जन्मने स्तोमो विप्रे भिरासया। अकारि रत्नधातमः॥१

य इन्द्राय वचोयुजा ततक्षुर्मनसा हरी। शमीभिर्यज्ञमाशत॥२

तक्षन्नासत्याभ्यां परिज्मानं सुखं रथं। तक्षन्धेनुं सबर्दुघां॥३

युवाना पितरा पुनः **सत्यमन्त्रा** ऋजूयवः । **ऋभवो** विष्ट्यक्रत ॥४

सं वो मदासो अग्मतेन्द्रेण च मरुत्वता । आदित्येभिश्च राजभिः ॥५

उत त्यं चमसं नवं त्वष्टुर्देवस्य निष्कृतं । अकर्त चतुरः पुनः ॥६

ते नो रत्नानि धत्तन त्रिरा साप्तानि सुन्वते । एकमेकं सुशस्तिभिः ॥७

अधारयन्त वह्नयोऽभजन्त सुकृत्यया । भागं देवेषु यज्ञियं ॥८

## ॥ अथ त्वष्टृ सूक्तम् ॥

**ऋषिः बृहस्पतिः कुत्साङ्गिरस च । छन्दः त्रिष्टुप् । देवता त्वष्टा ॥**

**त्वष्टा** दधच्छुष्ममिन्द्राय वृष्णेपाकोचिष्टुर्यशसे पुरूणि ।
वृषा यजन्वृषणं भूरिरेता मूर्धन्यज्ञस्य समनक्तु देवान् ॥ १

तन्नस्तुरीप मध पोषयित्नु देवत्वष्टर्वि रराणाः स्यस्वः ।
यतो वीरः कर्मण्यः सुदक्षो युक्तग्रावा जायते देवकामः ॥ २

**त्वष्टा** वीरन्देवकामञ्जजान त्वष्टुरर्वा जायत आशुरश्वः ।
त्वष्टेदँ विश्वं भुवनञ्जजान बहोः कर्तारमिह यक्षि होतः ॥ ३

पिशङ्गरूपः सुभरो वयोधाः श्रुष्टी वीरो जायते देवकामः ।
प्रजां **त्वष्टा** वि ष्यतु नाभिमस्मे अथा देवानामप्येतु पाथः ॥ ४

दशेमं **त्वष्टुर्**जनयन्त गर्भ मतन्द्रासो युवतयो विभृत्रं ।
तिग्मानीकꣳ स्वयशसं जनेषु विरोचनमानं परि षीँ नयन्ति ॥ ५

आविष्टयो वर्धते चारुरासु जिह्मानामूर्ध्वः स्वयशा उपस्थे ।
उभे त्वष्टुर्बिभ्यतुर्जायमानात् प्रतीची सिँहं प्रति जोषयेते ॥ ६

## ॥ अथ शिल्पी सूक्तम् ॥

**ऋषिः शिल्पकश्यपः नैध्रुवः। छन्दः त्रिष्टुप्। देवता शिल्पप्रजापतिः॥**

येभिः **शिल्पैः** पप्रेथानामदृँग्गत्। येभिर्द्यामभ्यपिꣳशत्प्रजापतिः।
येभिर्वाचं विश्वरूपाꣳ समव्ययत्। तेनेममग्न इह वर्चसा समङ्ग्धि ॥ १
येभिरादित्यस्तपति प्रकेतुभिः। येभिः सूर्यो ददृशे चित्रभानुः।
येभिर्वाचं पुष्कलेभिरव्ययत् । तेनेममग्न इह वचर्सा समङ्ग्धि ॥ २
आऽयं भातु शवसा पञ्चकृष्टीः। इन्द्र इव ज्येष्ठो भवतु प्रजावान्।
अस्मा अस्तु पुष्कलं चित्रभानु। आऽयं पृणक्तु रजसी उपस्थं॥ ३
यत्ते **शिल्पं कश्यप** रोचनावत् । इन्द्रियावत् पुष्कलं चित्रभानु।
यस्मिन्सूर्या अर्पिताः सप्त साकं । तस्मिन्राजानमधिविश्रयेम्॥ ४
ते अस्मै सर्वे कश्यपाज्ज्योतिर्लभन्ते।
तान्सोमः कश्यपादधिनिर्द्धमति। भ्रस्ताकर्मकृदिवैवं॥
प्राणो जीवानीन्द्रियजीवानि। सप्तशीर्षण्याः प्राणाः। सूर्या इत्याचार्याः॥ ५
अपश्यमहमेतन्सप्त सूर्यानिति। पञ्चकर्णो वात्स्यायनः। सप्तकर्णोश्च प्लाक्षिः॥
आनुश्रविक एव नौ कश्यप इति। उभौ वेदयिते। न हि शेकुमिव महामेरुं गन्तुम्॥ ६

## ॥ अथ दक्षा सूक्तम् ॥

**ऋषिः दाक्षायणः प्रजापतिः । छन्दः त्रिष्टुप् । देवता दक्ष प्रजापतिः ॥**

आयुष्यं वर्चस्यꣳ सुवीर्यꣳ रायस्पोषमौद्भिद्यम् ।
इदꣳ हिरण्यं जैत्र्यायाविशतां माम् ॥ १
उच्चैर्वादि पृतनाजि सत्रासाहं धनञ्जयम् ।
सर्वास्समृद्धीर्ऋद्धयो हिरण्ये अस्मिन्थ्समाहिताः ॥ २
शुनमहꣳ हिरण्यस्य पितुरिव नामाग्रभैषम् ।
तं मा हिरण्यवर्चसं पूरुषु प्रियं कुरु ॥ ३
सम्राजं च विराजं चाभिश्रीर्या च नो गृहे ।
लक्ष्मी राष्ट्रस्य या मुखे तया मा सꣳसृजामसि ॥ ४
न तद्रक्षाँसि न पिशाचास्तरन्ति देवानामोजः प्रथमजँह्येतत् ।
यो बिभर्ति **दाक्षायणः** हिरण्यः स देवेषु कृणुते दीर्घमायुः ।
स मनुष्येषु कृणुते दीर्घमायुः ॥ ५
यदाबध्नन्दाक्षायणा हिरण्यः शतानीकाय सुमनस्यमाना ।
तन्म आबध्नामि शतशारदायुष्माञ्जरदष्टिर्यथासम् ॥ ६

## ॥ अथ महेन्द्र सूक्तम्॥ शत्रुन्जय महामन्त्रः॥

**ऋषिः वामदेवः वसिष्ठ च। छन्दः त्रिष्टुप्। देवता महेन्द्रः॥**

इन्द्रा सूरा जनयन् विश्वकर्मा। मरुत्वा॑ अस्तु गणवान्त्सजातवान्।
अस्य स्नुषा श्वशुरस्य प्रशिष्टिम्। सपत्ना वाचं मनसा उपासतां॥ १
इन्द्रः सूरो अतरद्रजा॑सि। स्नुषा सपत्नाः श्वशुरोऽयमस्तु।
अय॑ शत्रून्जयतु जर्हृषाणः। अयं वाजं जयतु वाजसातौ॥ २ ॥ ३४॥

### ॥ अथ चतुर्त अनुवाकः॥

## ॥ अथ श्रद्धादेवी सूक्तम्॥

**ऋषिका श्रद्धा कामायनीः। छन्दः अनुष्टुप्। देवता श्रद्धादेवीः॥**

श्रद्धयाऽग्निः समिध्यते। श्रद्धया विन्दते हविः।
श्रद्धां भगस्य मूर्धनि। वचसाऽऽवेदयामसि॥१
प्रिय॑ श्रद्धे ददतः। प्रिय॑ श्रद्धे दिदासतः।
प्रियं भोजेषु यज्वसु। इदं म उदितं कृधि॥२
यथा देवा असुरेषु। श्रद्धामुग्रेषु चक्रिरे।
एवं भोजेषु यज्वसु। अस्माकमुदितं कृधि॥३
श्रद्धां देवा यजमानाः। वायुगोपा उपासते।
श्रद्धा॑ हृदय्ययाऽऽकूत्या। श्रद्धाया हूयते हविः॥४

श्रद्धां प्रातर्हवामहे। श्रद्धां मध्यन्दिनं परि।
श्रद्धाꣳ सूर्यस्य निम्रुचि। श्रद्धे श्रद्धापयेह मा॥४
श्रद्धा देवानधिवस्ते। श्रद्धा विश्वमिदं जगत्।
श्रद्धां कामस्य मातरं । हविषा वर्धयामसि॥६

## ॥ अथ मेधादेवी सूक्तम्॥

**ऋषिका मेधा शौनकर्वा। छन्दः अनुष्टुप् बृहती २ः३। देवता मेधादेवीः॥**

त्वं नो मेधे प्रथमा गोभिरश्वेभिरा गहि।
त्वं सूर्यस्य रश्मिभिस्त्वं नो असि यज्ञिया॥१
मेधां अहं प्रथमा ब्रह्मण्वतीं ब्रह्मजूतां ऋषिष्टुताम्।
प्रपीतां ब्रह्मचारिभिर्देवानामवसे हुवे॥२
यां मेधां ऋभवो विदुर्यां मेधामसुरा विदुः।
ऋषयो भद्रां मेधां यां विदुस्तां मय्या वेशयामसि॥३
यां ऋषयो भूतकृतो मेधां मेधाविनो विदुः।
तया मामद्य मेधायाग्ने मेधाविनं कृणु॥४
मेधां सायं मेधां प्रारर्मेधां मध्यन्दिनं परि।
मेधां सूर्यस्य रश्मिभिर्वर्चसा वेशयामहे॥५

## ॥ अथ रूपादेवी सूक्तम्॥

**ऋषिका त्वाष्ट्रीः विश्वरूपर्वा। छन्दः त्रिष्टुप्। देवता रूपादेवीः॥**

त्वष्टा पत्नीभिरिह नः सजोषा देवो देवीभिर्हविषो जुषाणः।
उपो रयिं बहुलꣳ विष्यता नः शृणोत नः सुमतिꣳ यज्ञियासः॥१
रेतोधा यस्य भुवनस्य देवः ससाद योनौ जनिता जनिष्ठः।
रूपाणि कृण्वन् विदधद्वपूꣳषि त्वष्टा पत्नीभिश्चरति प्रजानन्॥२
त्वष्टा पत्नीभिर नु मꣳहनेवाग्रेयावा धिषणे यं दधाते।
विश्वा वसु हस्तयोरादधानोऽन्तर्मही रोदसी याति साधन्॥३
आ नो वीरोभिर्जनिता मतीनां गोभिरश्वेभिर्वसुभिर्वसूयन्।
समञ्जानो धामभिर्विश्वरूपैस्त्वष्टा पत्नीभिश्चरति प्रजानन्॥४
त्वष्टा रेतो भुवनस्य पत्नीर्विकृण्वानास्त नयं भूरि पश्वः।
ग्ना वो देवी रोदसी तच्छृणोता नो रयिं जनत विश्ववारम्॥५
यज्ञं च नस्तन्वं च प्रजां च रयिं च नो जनत विश्वरूपम्।
योनौ रेतो द धदस्मे नु त्वष्ट देवीः पत्नीर्जनत जीवसे नः॥६

